# தச-ச்லோகீ ஸ்துதி

(பத்து ச்லோகம் கொண்ட ஆன்ம மஹிமை துதி.)

**ந பூ$^4$மிர் ந தோயம் ந தேஜோ ந வாயு:**
**ந க$^3$ம் நேந்த்$^3$ரியம் வா ந தேஷாம் ஸமூஹ: ।**
**அனைகாந்திகத்வாத் ஸுஷுப்த்யேகஸித்$^3$த$^4$:**
**ததே$^3$கோ(அ)வசிஷ்ட: சிவ:கேவலோ(அ)ஹம் ॥** 1

நான் என்ற ஆத்மா நிலமல்ல, நீரல்ல, தீயல்ல, வாயு அல்ல, வெளியல்ல, புலனல்ல, அவைகளின் கூட்டமுமல்ல. முடிவற்று நிலைபெற்றதான தால், தூக்க நிலையில் மாத்திரம் தெளியப்படுகிறது. எல்லாவற்றையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்த கேவல சிவமே நான்.

**ந வர்ணா ந வர்ணாச்ரமாசாரத$^4$ர்மா:**
**ந மே தா$^4$ரணாத்$^2$யான யோகா$^3$த$^3$யோபி ।**
**அனாத்மாச்ரயாஹம் மமாத்யாஸஹானாத்**
**ததே$^3$கோ(அ)வசிஷ்ட: சிவ:கேவலோ(அ)ஹம் ॥** 2

அந்தணன் முதலான ஜாதியல்ல, ப்ரம்மசர்யம் முதலான ஆச்ரமமல்ல, ஆசார தர்மமல்ல, தாரணம், தியானம், யோகம் முதலியவையுமல்ல. ஆத்மா அல்லாத பொய்ப்பொருளைச் சார்ந்து உதிக்கின்ற "நான்" "எனது" என்ற பொய்க் குழப்பத்தை அழிப்பதால், அனைத்தையும் விலக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**ந மாதா பிதாவா ந தே$^3$வா ந லோகா**
**ந வேதா$^3$ ந யக்ஞா ந தீர்த்த$^2$ம் ப்$^3$ருவந்தி ।**
**ஸுஷுப்தௌ நிரஸ்தாதி$^3$சூன்யாத்மகத்வாத்**
**ததே$^3$கோவசிஷ்ட: சிவ:கேவலோ(அ)ஹம் ॥** 3

தாயுமல்ல, தந்தையுமல்ல, தேவர்களுமல்ல, உலகங்களுமல்ல, மறைக மல்ல, யாகங்களுமல்ல, தூய்மையான இடமுமல்ல. தூக்க நிலையில் எல்லார் அற்று இல்லாமல் போய்விடுகிறபடியால், அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**ந ஸாங்க்$^3$யம் ந சைவம் ந தத்பாஞ்சராத்ரம்**
**ந ஜைனம் ந மீமாம்ஸகாதே$^3$ர் மதம் வா ।**
**விசிஷ்டானுபூ$^4$த்யா விசுத்$^3$தா$^4$த்மகத்வாத்**
**ததே$^3$கோவசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 4

ஸாங்க்ய மதமுமல்ல, சைவ மதமல்ல, பாஞ்சராத்ர மதமல்ல, ஜைன மதமல்ல, மீமாம்ஸா முதலான மதமுமல்ல, சிறந்த் மெய்ய நுபூதியில் தூய்மையாக விளங்குவதால் எல்லாவற்றையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**ந சோர்த்4வம் ந சாதோ4 ந சாந்தர் ந பா3ஹ்யம்**
**ந மத்3யம் ந திர்யங் ந பூர்வாபராதி3க் ।**
**வியத்3வ்யாபகத்வாத் அக2ண்டை3கரூப:**
**ததே3கோவசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 5

மேல் இல்லை, கீழ் இல்லை, உள்ளில்லை, வெளியில்லை, நடுவல்ல, குறுக்கல்ல என்பதல்ல, கிழக்கு - மேற்கு என்பதல்ல, ஆகாயம் போல் எங்கும் பரவியதாக இருப்பதால், பேதமின்றி ஒரே வடிவமாயுள்ளதும், அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கின்ற அந்தக் கேவல சிவமே நான்.

**ந சுக்லம் ந க்ருஷ்ணம் ந ரக்தம் ந பீதம்**
**ந குப்3ஜம் ந பீனம் ந ஹ்ரஸ்வம் ந தீ3ர்கம் ।**
**அரூபம் ததா ஜயோதிராகாரகத்வாத்**
**ததே3கோவசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 6

வெண்மையல்ல, கருப்பல்ல, சிவப்பல்ல, மஞ்சளல்ல, நொண்டியல்ல, பருமனல்ன, குறிலல்ல, நெடிலல்ல, உருவமல்ல. அதுபோல, ஒளிவடிவமாயுள்ள அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**ந சாஸ்தா ந சாஸ்த்ரம் ந சிஷ்யோ ந சிக்ஷா**
**ந சத்வம் ந சாஹம் ந சாயம் ப்ரபஞ்ச: ।**
**ஸ்வரூபாவபோ3தோ4 விகல்பாஸஹிஷ்ணு:**
**ததே3கோவசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 7

குருவல்ல, உபதேசமல்ல, சீடனுமல்ல, சிட்சையுமல்ல, நீயுமல்ல; நானுமல்ல. புலப்படும் இந்த உலகமுமல்ல. தன்னையறிதலால் உணரப்படுபவனும், தருக்கத்திற்கு அப்பாற்பட்ட அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**ந ஜாக்3ரந்த மே ஸ்வப்னகோ வா ஸுஷுப்தி:**
**ந விச்வோ ந வா தைஜஸ: ப்ராக்ஞகோவா ।**
**அவித்3யாத்மகத்வாத் த்ரயாணாம் துரீய:**
**ததே3கோ(அ)வசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 8

விழிப்பல்ல, கனவல்ல, தூக்கமல்ல, விழிப்பு நிலையைக் கொண்டவனல்ல, கனவ நிலையைக் கொண்டவனல்ல, கனவு நிலையைக் கொண்டவனல்ல, தூக்க

நிலையைக் கொண்டவனல்ல, இம்மூன்றும் அறியாமையாலுண்டாவதால் இம் மூன்றையும் பார்க்கின்ற நான்காவதான துரீயமாக, அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கும் அந்தக் கேவல சிவமே நான்.

**அபிவ்யாபகத்வாத் ஹி தத்வப்ரயோகா3த்**
**ஸ்வதஸ்ஸித்3த4பா4வாத் அனன்யாச்ரயத்வாத் ।**
**ஜக3த்துச்ச2மேதத் ஸமஸ்தம் தத3ன்யத்**
**ததே3கோவசிஷ்ட: சிவ: கேவலோ(அ)ஹம் ॥** 9

மேலும் இல்லை என மறுக்க இடமின்றி எங்கும் பரவியிருந்து விளங்குவதாலும், தானே சுயம்பிரகாசமான தும், பிரிதொன்றைச் சாராததுமான, அந்தப் பரம்பொருளைத் தவிர மற்ற இந்த உலகமெல்லாம் வெறும் பொய். அனைத்தையும் நீக்கி எஞ்சி நிற்கும் கேவல சிவமே நான்.

**ந சைகம் தத3ன்யத்3 - த்3விதீயம் குத: ஸ்யாத்**
**ந வா கேவலத்வம் ந சாகேவலத்வம் ।**
**ந சூன்யம் ந சாசூன்யம் அத்3வைதகத்வாத்**
**கத2ம் ஸர்வவேதா3ந்தஸித்3த4ம் ப்3ரவீமி ॥** 10

ஒன்று என்பதல்ல. அதைத் தவிர்த்து வேறு என்பது எவ்விதம் இருக்க முடியும்? தனியென்பதுமல்ல, தனியற்ற துமல்ல, சூன்யமுமல்ல, சூன்ய மில்லாததுமல்ல, ஏனெனில் அது இரண்டு என்ற பேதமற்றதாக உள்ளது. வேதாந்த நூல்கள் அனைத்தும் ஒருமிக்கத் தீர்மானித்து உபதேசிக்கப்படும் ஆத்மாவை எவ்வாறு சொற்களால் எடுத்துரைப்பேன்?

